



# பாண்டியம்.

## முகவுரை.

உலகில்வழங்கும் பலபல பாஷைகளிலும் எழுத்துக்கள் ஒலி வடிவிற் பெரும்பான்மை ஒற்றுமையுடையனவாயிருந்தும் வரிவடிவில் வேறுபட்டு வழங்கப்படுகின்றன. பண்டைக்காலத்தில் ஒவ்வொருபாஷையும் ஒவ்வொருதேசத்துள்ளேயே வழங்கிவந்தபடியால் ஒவ்வொருதேசத்தாரும் அவரவர் பாஷைக்குரிய ஒலியெழுத்துக்கு வேறுவேறு வரிவடிவு கற்பித்துக்கொண்டு அவரவர்க்குரிய பாஷையையே பெரும்பாலும்பயின்று நூல்களுமியற்றிப் போந்தனர்.

பின்பு அறிவுவளர்ச்சிக்குரிய அரியபெரிய பலபலவிஷயங்களை நூல்களினமைக்கப்பெற்ற வடமொழியானது வழக்கிறத்தலின்றிப் பொதுமொழியாகி எங்கும்பரவத்தலைப்படவே அதனை ஒலிவேறுபாடில்லாத தெலுங்குமுதலிய பாஷைகளைப் பயில்பவர்கள் அவரவர் பாஷைக்குரிய எழுத்துக்களால் எழுதிப்பயில்வாராயினர். தமிழ் முதலிய ஒலிவேறுபாடுள்ள பாஷையுடையவர்கள் அதற்குத் தம் பாஷைக்குரியவரிவடிவெழுத்தோடொத்த ஒருவகை வரிவடிவெழுத்து அமைத்துக்கொண்டு எழுதிப்படித்து வந்தனர்.

பின்பு எழுத்துக்களுக்கு அச்சியந்திரங்களமையவே சிற்சில வடநூல்கள் தமிழர்பயிலும் வடவெழுத்தில் அச்சிடப்பட்டனவாயினும் அவை தமிழ்நாட்டிலுள்ள சிறுபாலார்க்கே பயன்படுதலல்லது பிறநாடுகளிலுமுள்ள மற்றையோர்க்குப் பயன்படவில்லை. இவ்வாறே சில அரியபெரிய வடநூல்கள் தேவநாகரலிபியிலும, தெலுங்கு முதலிய லிபியிலும் அச்சிடப்பட்டன. அவை தேசபாஷாலிபியானமையால் அவ்வந்நாட்டார் பலர்க்கும் பயன்படுதலால் அப்புத்தகங்கள் மிகப்பதிக்கப்பட்டு விலைகுறைத்து விற்கப்பட்டன. அப்புத்தகங்களையும் வாங்கிப்படிக்கக்கருதிய தமிழ்நாட்டார் தமக்க

மைந்த இருவகை லிபியுடன் தெலுங்கு, தேவநாகரம் என்னும் இருவகை லிபியும் கற்கத்தலைப்பட்டார்கள்.

இவற்றோடு அமையாது, இக்காலத்து உலகவழக்குக்கு ஆங்கில பாஷையினறியமையாததாகவே அதற்குரிய கையெழுத்து, அச்செழுத்து, சிற்றெழுத்து பேரெழுத்தென்னும் எழுத்துவகைகளையும் பயின்று வருகின்றனர்.

ஆதலால் நம் தமிழ்நாட்டிளைஞர்கள் அறிஞராகவேண்டிக்கற்கத்தகும்பாஷைகள்மூன்றிலும் பழகவேண்டிய வரிவடிவெழுத்துக்கள் பலவகையாகின்றன.

இவற்றைக் கற்கவிருப்போர் நுண்ணறிவுடையராயினும் சற்றேறத்தாழ அவர்க்கு இரண்டு வருடகாலம் [illegible] நேரிடுகின்றது.

வரிவடிவெழுத்தின் விஷயமாக இவைபோலுமின்னும் பலபல இடர்ப்பாடுகளுள்ளனவற்றை யுணர்ந்து உலகத்திலுள்ள பாஷைகளெல்லாம் ஒருவகைவரிவடிவெழுத்தாலேயே யெழுதவும் படிக்கவும் நேர்ந்தால் நன்மையாகுமெனக் கருதி, அதற்கான சிலமுறைகளைக் கைப்பற்றிப் பயின்று முடிவுசெய்துகொண்டிருந்த எனக்கு 1911-௵ ஜனவரி௴ 15௳ வெளிவந்த பூர்ணசந்திரோதயம் என்னும் பத்திரிகை கிடைத்தது. அதனை வழக்கம்போற்படித்து வருகையில் ஹிந்தியா தேசமுழுதும் ஒரே பாஷையும் ஒரே லிபியும் இருக்கற்பாலது என்னும் தலையங்கத்தின் 4-ஆவது பத்தியில் "ஏகலிபிவிஸ்தாரபரிஷத்" என்றுபெயருள்ள ஒருசமாஜம் கல்கத்தாவில்சென்ற"
"ஐந்துவருஷமாக நடைபெற்று வருகின்றது; அதன் முக்கியமான"
"நோக்கம் என்னவென்றால், ஒரே எழுத்தில் தேசத்தில் வழங்கு"
"கின்றபலபாஷைகளும் எழுதப்படவேண்டுமென்பதாம். அதனு"
"டன் தேசமுழுவதும் ஒரேபாஷை பேசப்படுவரவேண்டுமென்று"
"நினைக்குங்கருத்துப் பொருத்தமாகவிருக்கிறது. நம்தேசத்திலுள்ள"
"வித்வான்களும் அறிஞர்களும் தாங்கள் கற்கும் பலபாஷைகளு"
"டன் ஹிந்திபாஷையையும் கற்கவேண்டுமென்று சங்கற்பங்கொள்"
"வார்களாகில் நாமிப்போது கொள்ளுங்கருத்துச் சீக்கிரம் சித்திபெ"
றும்" (என்றும்) "எழுத்தின் உருவத்தைப்பற்றித் துரபிமானங்"

அதற்குத் தேவநாகர லிபியை விரும்புவோமாயின் இத்தகைய
குறைவுபாடு அதற்கும் உள்ளனவாம். தேவநாகர எழுத்துக்களு
டன் பிறதேசபாஷைச்சிறப்பெழுத்துக்களைமட்டுமே சேர்த்துக்கொ
ண்டு பொதுலிபியாகக் கொள்ளக்கருதின் மற்றலிபிகளைவிட எழுத்
துப்பெருக்கமுள்ளதாய்விடுமாதலாலும், அவ்வெழுத்துக்கள் வெகு
முயற்சியுடையனவாயிருத்தலாலும், பிறபாஷாலிபிகளுடன் முறை
பிறழ்தலுடையவாமாகலாலும் ஏகலிபியாதற்கிடமின்மையால் உலக
த்தார் அதனை எளிதிற்கொள்ளுதலரிதாகும். ஆதலால் பிறிதாகவே
யொரு புதுலிபியமைத்துக்கொள்வது தகுதியுடையதென்று தோன்
றுகின்றது.

புதுலிபியமைப்பால் தேசபாஷாலிபிகளைத் தற்காலம் கைவிடு
தல் சாத்தியமாகமாட்டாது. தேசபாஷாலிபியொன்றிருக்கும்போது
புதுலிபியை உலகத்தார் கற்கத்தொடங்கல்சாத்தியமாகுமாவென்று
கேட்கலாம். தொழில் செய்பவர்களுக்கு வேண்டுமகருவிகள் தம்
மிடம் நிறைந்திருப்பினும் அவற்றினு மிக்க சௌகரியமுள்ள கருவி
கிடைக்குமாயின் அதனையும் விரும்புகிறார்கள். உதாரணமாக வண்டி,
குதிரை முதலிய வாகனங்களுள்ளவர்களும், பைசைக்கிள்களையும்,
மோட்டார்வண்டிகளையும் வாங்கி யுபயோகிக்கக் காண்கிறோம். அது
போலத் தேசபாஷை எழுத்துக்களைப்பார்க்கிலும் சுலபமாக எழுதப்
படிக்கத்தெரிந்துகொள்ளும்படி புதுலிபியையமைத்தால் அது ஆங்
கிலக்கையெழுத்துப்போலத் தற்காலம் தேசபாஷாலிபியோடு துணை
லிபியாக உலகிற்பயன்படுமென்பதிற் சந்தேகமில்லை. இவ்விஷயத்
தில் ஏகலிபி விஸ்தாரபரிஷத்தும் பலஅறிஞர்களும் இணக்கமுள்ள
அபிப்பிராயத்துடனிருப்பதாகத் தெரிந்தபடியால் அவர்களும் மற்
றுமெல்லோரும் ஆதரிக்கும்படி எழுத்துக்களைச் சுலபமாக்கவேண்டு
மியல்புகளை யாராய்ந்து, தேசபாஷாலிபிகளின் சாயையுடையதாயும்,
சிறுமுயற்சியிலெழுதுவதாயும், எழுதுகோல்முனை வலப்புறம் நிற்க
முடிவதாயும் ஒலிவடிவெழுத்துக்களோடொப்புமையுடையதாயும்,
சிறுவர்களும் மிக எளிதிற்கற்கத்தக்கதாயும், கற்பவர் சில எழுத்
துக்களைத் தெரிந்தஅளவிலே மற்றை எழுத்துக்களையும் தாமே
தெரிந்துகொள்ளத்தக்க யுக்தியோடு கூடியதாயும், பலபல பாஷை
களிலும் எழுதவல்லதாயும், எழுத்தெழுதும் இடத்திலும் காலத்தி

கொள்ளாமல் தேவநாகர எழுத்தை அநுஷ்டிக்கும்படியாகத்" தமிழ்ச்சங்க முதலான சபையார்கள் முயற்சிப்பாராகில் அந்த" அநுஷ்டானம் சாத்தியமாகுமென்று மதிக்கிறோம்." என்றும், ஹிந்திபாஷையை ஹிந்தியாமுழுமைக்கும் பொதுப்பாஷையாக அமைத்துக்கொள்ள முயலவேண்டும் என்னும் நோக்கம் வெளியிடப்பட்டிருப்பதை யுணர்ந்தேன். இந்த நோக்கம் காலகதியால் முற்றுப்பெறுவதானாலும் முற்றுப்பெறாதுபோனாலும் ஏகலிபியமைப் பயன்படத்தக்கதென்று தோன்றுகின்றது.

ஏனெனில், தனித்தமிழ்நூல்களொழிந்த வடமொழிகலந்த மணிப்பிரவாளநடையாலாகிய திவ்வியப்பிரபந்த வியாக்கியான முதலிய பல சிறந்தநூல்களும் ஜைனமதநூல்களும் தனித்தமிழெழுத்தால் எழுதவும் படிக்கவும் அச்சிடவு மியலாமையால் தென்னாட்டு வடவெழுத்தேனும், தெலுங்கெழுத்தேனும் துணையாக வேண்டப்பெற்றிருக்கின்றது.

அவ்வாறே, அவை தனித்தெலுங்கெழுத்தாலாயினும் பிறவெழுத்தாலாயினும் வழங்காநின்ற க ச ட த ப எழுத்துக்களுக்குரிய முதலியன அவற்றுள் இல்லாமையால் அவை இத்தமிழெழுத்துக்களையே துணையாகக்கொண்டு அச்சிடப்பெற்று வெளிவருகின்றன. அன்றியும் ஆங்கிலமொழிவிரவிய தேசபாஷையிலுள்ள சட்டப்புத்தகங்கள் முதலிய அரசியல்நடைகளும் ஆங்கிலவெழுத்துதவியை வேண்டுகின்றன. இதுபற்றியே "எப்" என்னுமெழுத்துக் தமிழிற் புதிதாய் ஒன்று அமைத்துக்கொள்ளவேண்டுமென்று ஒரு நண்பர் எழுதிய வியாசம் ஒன்று சுதேசமித்திரனில் வெளிவந்திருக்கிறது.

அன்றியும், பாஷாந்தரங்களிலிருந்து அரிய நூல்களைத் தமிழ்நடையில் மொழிபெயர்க்குமிடத்து அவ்வந் நூல்களிற் பயிலும் குழூஉக்குறிப்பெயர்களை அப்படியே யெழுதவேண்டுமெழுத்துக்கள் இல்லாமையால் அவற்றை மொழிபெயர்த்து எழுதுவோரும் அச்சிடுவோரும் இடர்ப்பட்டு அவ்வப்பாஷையெழுத்துக்களை யுபயோகிக்கின்றனர். ஆகையால் இக்குறைகணீக்கி எல்லாமொழிகளையும் இடரின்றி எழுதவல்ல ஏகலிபி ஒன்றிருப்பது நலமேயாம்.

ம் சுருக்கமுள்ளதாயும், அச்செழுத்துப் பெட்டிக்குச்சில அறையு க்குருவதாயும், அச்சுக்குவிசைவிற் சேர்க்கத்தக்கதாயும், டைப் ட்டிங் எந்திரத்துக்குச் சுலபமாக உபயோகப்படுவதாயும், உயிர் மெய்யெழுத்து வரிகளேயன்றிக் க, ஙங, ச்ச, ண்ண முதலிய தன்னொ ரெண்டிணைந்த உயிர்மெய்யெழுத்துக்களையும் ஙக, ஞ்ச, ண்ட முத ன இனமெலிமெய்தொடர்ந்த உயிர்மெய்யெழுத்துக்களையும் அவற் டு ஒற்றடுத்துவருவனவற்றையும் பிறமெய்தொடர்ந்து வருவன ற்றையும் ஒரெழுத்தாகக்கூட்டியெழுதற்கேற்ற முறையுடையதா ம், அக்ஷரதத்வங்களைத் தழுவியதாயும் ஒருவகைப் புதுலிபி என்று மைக்கப்பெற்றிருக்கிறது.

இது, பாலவனத்தம் ஜமீந்தாரும், மதுரைத்தமிழ்ச்சங்க ஸ்தா கரும் அதன் அக்கிராசனருமான ஸ்ரீமாந்-பொ. பாண்டித்துரை வர்களின் பேருபகாரத்தால் முடிக்கப்பெற்றமையால் இதற்கு வர்கள் பெயரால் பாண்டியமென்று பெயர்கொடுக்கப்பெற்றிருக் றது.

இதன் ஒவ்வோரெழுத்தும் தெரிந்துகொள்ளும்படி தமிழ் முத ிய எழுத்துக்களைக் கீழே கொடுத்துக்காட்டியும், இதிலடங்காத ழுத்துக்களைக்கற்பித்து எழுதிக்கொள்ளும்முறையும் பிறவும் அறிந் துகொள்ளும்படி விவரணமெழுதியும் இதனை வெளியிட்டிருக்கிறேன்.

இதனை அறிஞர்களும் அந்நியபாஷாநிபுணர்களும் கண்ணுற்று இன்னும் சேர்க்கவேண்டிய எழுத்துக்கள் இருந்தால் அவற்றையும் இம்முறையாகச் சேர்க்கும்படி எனக்கு அறிவிக்குமாறு வேண்டிக் கொள்வதுடன் அவ்வாறு செய்பவர்களுக்கு மிக்க நன்றிபாராட்ட வும் கடமைப்பட்டிருக்கிறேன்.

இங்ஙனம்,

திரு. நாராயணையங்கார்.

---

# பாண்டியம்.

அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ ஃ

க கா கி கீ கு கூ கெ கே கை கொ கோ கௌ க்

ச சா சி சீ சு சூ செ சே சை சொ சோ சௌ ச்

ஞ ஞா ஞி ஞீ ஞு ஞூ ஞெ ஞே ஞை ஞொ ஞோ ஞௌ ஞ்

ட டா டி டீ டு டூ டெ டே டை டொ டோ டௌ ட்

ண ணா ணி ணீ ணு ணூ ணெ ணே ணை ணொ ணோ ணௌ ண்

த தா தி தீ து தூ தெ தே தை தொ தோ தௌ த்

# பாண்டியம்.

ழ ழா ழி ழீ ழு ழூ... ழெ ழே ழை ழொ ழோ ழௌ ழ்

ள ளா ளி ளீ ளு ளூ ளெ ளே ளை ளொ ளோ ளௌ ள்

ற றா றி றீ று றூ றெ றே றை றொ றோ றௌ ற்

ன னா னி னீ னு னூ னெ னே னை னொ னோ னௌ ன்

ஜ ஜா ஜி ஜீ ஜு ஜூ ஜெ ஜே ஜை ஜொ ஜோ ஜௌ ஜ்

க்ஷ க்ஷா க்ஷி க்ஷீ க்ஷு க்ஷூ க்ஷெ க்ஷே க்ஷை க்ஷொ க்ஷோ க்ஷௌ க்ஷ்

ஸ ஸா ஸி ஸீ ஸு ஸூ ஸெ ஸே ஸை ஸொ ஸோ ஸௌ ஸ்

ந நா நி நீ நு நூ நெ நே நை நொ நோ நௌ ந்

ப பா பி பீ பு பூ பெ பே பை பொ போ பௌ ப்

ம மா மி மீ மு மூ மெ மே மை மொ மோ மௌ ம்

ய யா யி யீ யு யூ யெ யே யை யொ யோ யௌ ய்

ர ரா ரி ரீ ரு ரூ ரெ ரே ரை ரொ ரோ ரௌ ர்

ல லா லி லீ லு லூ லெ லே லை லொ லோ லௌ ல்

வ வா வி வீ வு வூ வெ வே வை வொ வோ வௌ வ்

ஹ ஹா ஹி ஹீ ஹு ஹூ ஹெ ஹே ஹை ஹொ ஹோ ஹௌ ஹ்

க்க க்கா க்கி க்கீ க்கு க்கூ க்கெ க்கே க்கை க்கொ க்கோ க்கௌ F

ங்க ஙகா ஙகி ஙகீ ங்கு ங்கூ ங்கெ ஙகே ஙகை ஙகொ ஙகோ ஙகௌ ங்

# விவரணம்.

இப்பாண்டியம பழகவிரும்புவோர் இவ்வெழுத்துக்களுள் முதல் வரியிலுள்ள உயிரெழுத்துக்களையும் வரிதோறும் கடைசியிலுள்ள மெய்யெழுத்துக்களையும் முதலிற்றெரிந்துகொள்ளவேண்டும்.

ஒவ்வோரெழுத்துக்கும் தொடங்கப்படும் இடப்பக்கம் அடியாகவும், முடிக்கப்படும் வலப்பக்கம் முடியாகவும் குறுக்குவரை யுடலாகவும் கருதவேண்டும். எழுத்துக்கள்தோறுமுள்ள குறுக்குவரையைக் கீழ்மேல் சாயாது வரிநடுவிற் சமமாகவைத்தெழுதவேண்டும்; அது தனித்துநிற்பின் அகரமும் முன்னையின்கீழ்ச் சிறுபுள்ளியொட்

_ப்பெறின் ஆகாரமும் ஆம். மற்றையுயிர்களுக்குக் கோடுகொடுக்கப்படும். கோடென்பதுபிறைவடிவாக வளைத்தெழுதப்படும் வரைராம்.

இ ஈ எ ஏ ஐ யென்னும் எழுத்துக்கள் குறுக்குவரையின் மேற்கோடும் உ ஊ ஒ ஓ ஔ என்னும் எழுத்துக்கள் குறுக்குவரையின் கீழ்க்கோடும் கொடுக்கப்பெறும். அவற்றுள் குற்றெழுத்துக்களுக்குக் குறுங்கோடும் நெட்டெழுத்துக்களுக்கு நெடுங்கோடும் கொடுக்கவேண்டும். குறுங்கோடு குறுக்குவரையின் எல்லையுள் அடங்கியிருக்கவேண்டும். நெடுங்கோடு குறுக்குவரை எல்லையைமறித்து நீண்டிருக்கவேண்டும். இ ஈ உ ஊ என்னுமெழுத்துக்களுக்கு குறுக்குவரையினிடையிற் கோடுதொடங்கவேண்டும். மற்ற எகரமுதலிய வுயிரெழுத்துக்களுக்குக் குறுக்குவரையின் முனையிற் கோடுதொடங்கவேண்டும். ஐகார ஔகாரங்களின் கோட்டுமுனை முறையே யிடச்சுழியும் வலச்சுழியும்பெறறு எகர ஒகரங்களில் வேறுபட்டிருக்கவேண்டும். இவ்வாறுள்ள உயிர்வருக்கத்தின் உருவத்தை முதல்வரியிற் கண்டுகொள்க.

க, முதலிய மெய்யெழுத்துக்களையெல்லாம் அவற்றின உயிர்மெய்வரியிறுதியிற்காட்டியவாறு கண்டெழுதிக்கொள்க.

வேண்டும் மெய்யெழுத்தொன்றை முன்னெழுதி அதன்பின் யாதேனுமோருயிரெழுத்தை யொட்டியெழுத அவை அவற்றாலாகிய உயிர்மெய்யெழுத்தாம். அவற்றை உயிர்மெய்வரிகளிற் கண்டு அவ்வாறே காட்டாதொழிந்த வுயிர்மெய்யெழுத்துக்களையும் கற்பித்தெழுதிக்கொள்க.

சுழிதனித்து நிற்பின் ஆய்தவெழுத்துக்கு அறிகுறியாம். அதன்பின் உயிரெழுத்துக்களை யொட்டின் வடமொழிச்சிறப்பெழுத்தாகிய ஹகார உயிர்மெய் வரியாகுமாறு காட்டப்பட்டிருக்கிறது. மற்றும் ஸகாரஷகார முதலிய சிறப்பெழுத்துக்களும் காட்டப்பட்டவாறு கண்டுகொள்க.

இனிவடமொழி வர்க்கபஞ்சகத்தின் சிறப்பெழுத்துக்களைத்தெரிந்து எழுதிக்கொள்ளுமாறு க ச ட த ப க்களின் தொடக்கத்தில் நிலைவரையாகியகால் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதனை இடப்பு

றம் சாய்த்தெழுத அவற்றின் முதலெழுத்தாகவும், அவ்வாறு சாய்ந்து அக்காலைச் சிறிது நீட்டியெழுத அவற்றின் இரண்டாமெழுத்தாகவும், அக்காலை வலப்புறம் சாய்த்தெழுத மூன்றுமெழுத்தாகவும் அவ்வாறு(வலப்புறம்)சாய்த்தகாலைச்சிறிது நீட்டியெழுத அவற்றின் நான்காமெழுத்தாகவும் பாவிக்கவேண்டும். இவ்வியல்பு ஜகாரவரியினமைந்திருப்பதுகண்டு மற்றை எழுத்துக்களையும் எழுதிக்கொள்க.

மேலேகாட்டிய கசடதப வரிகளிற் றொடக்கத்தில் எழுதும் காலை இடம சாயாது செவ்வே நிறுத்தியது, "சாகாடுபுதிது" என்னும் சொற்றொடரிற்போல உரப்பலெழுப்பலின்றி யிடைநிகரா யொலிக்கும் கசடதபக்களைக் குறிப்பதற்கென்று கண்டுகொள்க.

இவற்றுளடங்காத தெலுங்கிலுள்ள சகரவர்க்க விசேடங்களிரண்டற்கும் மூன்றாவது நான்காவது சகரங்களின் உடலைச் சிறிது நீட்டி எழுதி வேறுபடுத்திக்கொள்க.

வடமொழி எழுத்தில் முப்பதாம் மெய்யாகிய ஹகாரத்துக்கு இதிற் சகரவரிக்குக்காட்டியதையே அறிகுறியாகக்கொள்க.

வடமொழி உயிர்வரியினிடைநின்ற ஃ ஸ்ரு ள ள—ம என்னும் நான்கு சிறப்பெழுத்துக்களில் முதலாவதற்கு வடமொழியுயிர்மெய் வரியில்வரும் அதன் குறிபோலவே J இவ்வாறு குறுக்குவரைக்குக் கீழிடையிற் றொடங்கி இடப்புறம் நோக்கிய கோடு கொடுக்க.

இரண்டாவதற்கு ✓ இவ்வாறு அக்கோட்டின் முனையிற் சுழி கொடுக்க. மூன்றாவதற்கு J இவ்வாறு குறுக்குவரையின் முனையிற் றொடங்கியகோடுகொடுக்க. நான்காவதற்கு ✓ இவ்வாறு அக்கோட்டின்முனையிற் சுழிகொடுக்க. இவற்றை மெய்யெழுத்துக்களின் பின் ஒட்டிஎழுதி அவை அவற்றுடன் கூடிய உயிர்மெய்யெழுத்துக்களாமாறுகண்டுகொள்க.

ஙகரவரிஉயிர் மெய்யெழுத்துக்கள் வழக்கில் அருகியவாதலால் அவற்றை வரியினமைத்துக் காட்டாது "ங்க" வரியினிறுதியில் ஙகர வொற்றுமட்டும் காட்டப்பட்டிருக்கிறது. அதனுடன் உயிர்க்குறிகளையொட்டி ஙகர வுயிர்மெய்வரியையும் தன்னெற்றிணையுயிர்மெய்க் குறியையொட்டி 'ஙங' வரியையுமெழுதிக்கொள்க.

க்கவரியினிறுதியில் + இவ்வாறுவைக்கப்பட்டது ஆங்கிலச்சிறப் பெழுத்தாகிய(F)எப் என்பதாம். அதனுடனும் உயிர்க்குறிகளையொட்டி அதன்உயிர்மெய்வரி எழுதிக்கொள்க.

ககர முதலிய மெய்யெழுத்துக்கள் கால் ஒன்று கூட்டி யெழுதப் பெறின் க்க, ங்ங, ய்ய, முதலிய தன்மெய்யிணையுயிர்மெய்யென்னும் கூட்டெழுத்தாம். அக்கால் அகரமேறிய தன்மெய்யிணையுயிர் மெய்யெழுத்துக்கு ஈற்றிலெழுதவேண்டும். இகர முதலிய உயிரேறிய அவ்வெழுத்துக்கு அவ்வவ்வுயிர்க்குறிக்கெதிர்ப்புறம் தொடங்கி யொட்டி எழுதவேண்டும்; இதனைக்க வ்வரியிற்கண்டு அவ்வாறு ங்ங வரி முதலிய பிறவுமெழுதிக்கொள்க.

அவ்வாறே சிறியசுழிகொடுத் தெழுதப்பெறின், இனமென் றொடர் உயிர்மெய்யென்னும் கூட்டெழுத்தாம். இதனை ங்க வரியிற் காட்டப்பட்டவாறு கண்டுகொள்க. மற்றும் இவ்வாறே ஞ்ச, ண்ட, ந்த, ம்ப, ன்ற என்னும் இனமென்றொடர் உயிர்மெய்வரி எழுதிக் கொள்க.

இனிச்சிறுகால், சிறுபுள்ளி, சிறுவிலங்கு என்பனவற்றை எழுத்துக்களின் மேலும் கீழும் முதல், இடை, கடையென்னும் ஆறிடங்களிலும் இட அவை முறையே கசடதபற, ஙஞணநமன, யரலவழள என்னும் மெய்யீற்றுக் கூட்டெழுத்துக்களாம். இவ்வெழுத்துக் களுந்தெரிந்துகொண்டால் வாழ்ந்தோர் என எட்டெழுத்தால் எழுதப்படுஞ் சொல் “வாழ்” என ஓரெழுத்தும் “ந்தோர்” என ஓரெழுத்துமாக இரண்டெழுத்தால் எழுதப்படும். கொக்கு, காக்கை, கோங்கு, வேங்கை என ஐந்து எழுத்தால் எழுதப்படுஞ்சொற்கள் இரண்டெழுத்தால் எழுதப்படும் என்பதை அவற்றிற்கு வேண்டு முயிர்மெய்யெழுத்தைக்கொண்டெழுதிக் கண்டுகொள்க.

மற்றைய கூட்டெழுத்துக்களும் பிறவும் இவ்வெழுத்துக்களுக்கு அச்சமைத்துச் சொற்றொடருடன் புத்தகமாக வெளியிடும்போது விரித்தெழுதப்பெறும்.

திரு. நாராயணையங்கார்.

---